ஓம்

# ஸ்ரீ பத்திரகாளியம்மன் வழிபாடு



அன்பளிப்பு :

## அருள்நெறித் திருக்கூட்டம்,

கண்டவராயன்பட்டி.

## ஸ்ரீ மீனாக்ஷி மில்ஸ் லிமிடெட்

திருப்பரங்குன்றம் ரோடு,

மதுரை.



ஸ்தாபகர் :

### கரு. முத்து தியாகராசன்,

ஆ. தெக்கூர், முகவை மாவட்டம்.



நல்வாழ்த்துக்கள்



A. சம்பந்தம்,

நிர்வாக இயக்குநர்.



கண்டவராயன்பட்டி

# ஸ்ரீ பத்திரகாளியம்மன் கோவில் வழிபாடுகள்



வெளியிட்டவர்:

நா. அருணாசலன்

செயலாளர்

அருள்நெறித் திருக்கூட்டம்

கண்டவராயன்பட்டி

3/3

ஓம்

கணபதி துணை.

# கற்பக விநாயகர்

## பிள்ளையார்பட்டி



காட்டுவழி சென்றாலும் கள்ளர்பயம் - வந்தாலும்
கேட்டுவழி காலகனர் கிட்டிலும் நாட்டமுடன்
நம்பிக்கையாக நம் கற்பகவிநாயகனை நினைத்திட்டால்
அவன் தும்பிக்கை வந்து துணைநிற்குமே!

# அன்புரை

கண்டவராயன்பட்டி ஸ்ரீ பத்திரகாளியம்மன் கோவில் என்ருல் உள்ளம் சிலிர்க்கும்; உணர்வு பெருகும்; பக்தி வளரும். அத்தகைய திருக்கோவிலில் வீற்றிருக்கும் ஸ்ரீ பத்திர காளியம்பிகையான "வனதுர்க்காதேவி"யை பக்தர்கள் வழிபாடு செய்ய இச்சிறு நூலை வெளியிட்டு இலவசமாக வழங்கும் பாக்கியத்தை எங்கள் திருக்கூட்டத்திற்கு ஆண்டுதோறும் அருள்பாலித்துள்ள அம்பிகைக்கு எங்கள் தாழ்பணிந்த வணக்கங்கள்.

கண்டவராயன்பட்டி.
ரௌத்திரி
ஆவணி 5

**நா. அருணாசலன்**
செயலாளர்
அருள்நெறித் திருக்கூட்டம்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ பத்திரகாளியம்மன் திருவீதிகளெல்லாம் திருவுலாக்
கொண்டெழுந்தருளிவர ஆவன செய்த
அருள்நெறிச் செல்வர்



பழ. கரு. முப நா. அருணாசலம் செட்டியார்
கண்டவராயன்பட்டி

# ஸ்ரீ பத்திரகாளியம்மன் கண்டவராயன்பட்டி



சூலாயுதம் கொண்ட சுடரொளியே
பாலன் உனை பக்தியோடு பணிந்தே வருகின்றேன்
மேலான செல்வமும், மேதக்க செல்வாக்கும்
என்றும் குறையாது தந்துவருவாய் தாயேநீ !

ஓம்
சக்தியே நம:

# ஸ்ரீ பத்திரகாளியம்மன்

என்பது

# வன துர்க்கை — யே

கண்டவராயன்பட்டி ஸ்ரீ பத்திரகாளியம்மனை ''கிணற்றடிக்காளி'' என வழக்கமாக பூசாரிகள் பொதுமக்கள் கூறினலும், அவதாரம் ஸ்ரீ பத்ரகாளி அவதாரமாக நவகாளியாக ஊருக்கப்பால் வனத்தில் திருக்கோவில் கொண்டெழுந்தருளியிருப்பதைப் பார்த்த மகான்கள் சிலர் இவ்வம்பிகையை ''வன-துர்க்கை எனத் தீர்மானித்து 20 ஆண்டுகளுக்குமுன் ஸ்ரீ பத்ரகாளியம்மன் என்று அழைத்து திருவீதிவுலாவை ஆரம்பிக்கச்செய்தார்கள். அதிலிருந்துதான் அம்பிகை புறப்பாடு உற்பத்தியானது.

எனவே ''துர்க்கையின்'' பெருமையைக் குறித்து நமது பெருமதிப்பிற்குரிய திருப்பராய்த்துறை தபோவனம் சுவாமி சித்பவானந்தா அவர்கள் வெளியிட்ட கருத்தை கீழே பக்தர்கள் தெரிந்துகொள்ள தரப்பெற்றிருக்கிறது.

# துர்க்கை



பூலோக வாழ்க்கை நன்கு நடைபெறுதற்கு சக்தியின் என்னென்ன பகுதிகள் என்னென்ன பாங்கில் அமைந்திருக்க வேண்டும் என்பதை துர்க்கா தேவியின் சொரூபம் நன்கு விளக்குகிறது. பிரபஞ்சம் முழுதிலும் அவள் வியாபித்திருக்கின்ருள். எனினும் ஆண்டுக்கொரு தடவை அவள் ஹிமாசலத்திலிருந்து பூமியின் சமவெளிக்கு எழுந்தருளுகின்ருள் என்பது கோட்பாடு. புரட்டாசி மாதத்தில் வரும் நவராத்திரி அவளுடைய வருகையைக் குறிக்கிறது. மழை பெய்து ஓய்ந்தானபிறகு அப்பொழுது நிலவுலகெங்கும் சக்தி எழுந்தருளியிருப்பதன் அறிகுறிகள்தென்படுகின்றன அவள் வரும்பொழுது அவளுடைய அம்சங்களாகிய லக்ஷ்மி சரஸ்வதி, கணேசன், கார்த்திகேயன் ஆகியவர்கள் அவளுடன் வருகிருர்கள். மண்ணுலக வாழ்வு மாண்புறுதற்கு வாழ்க்கையில் என்னென்ன பகுதிகள் எப்படி அமைந்திருக்க வேண்டும் என்பதை துர்க்கையும் அவளுடைய பரிவாரங்களும் சேர்ந்து விளக்குகிருர்கள். வாழ்வு நல்வாழ்வு ஆவதற்குத் தனி மனிதன் வாழ்விலும் சமூகத்தின் நடைமுறையிலும் ஆட்சியானது சிறப்புற்றிருக்கவேண்டும் என்பதை துர்க்காதேவி விளக்குகின்ருள். திறம்பட அவள் செலுத்துகிற ஆணையை மீறி யாரும் செல்லமுடியாது. உயர்ந்த ராணுவ தத்துவமே வடிவெடுத்தவள் என்று அவளைப்பகரலாம். மானுட வாழ்க்கையில் எல்லாம் போருக்கிரிய சேனை மயமாகப் போய்விடுவது போதாது வேண்டிய தருணத்தில் சேனை ஒன்றுவெற்றிகரமாக வினையாற்ற வேண்டும் என்பது மெய். அத்தகைய செயலைச் செய்வதற்கு சேனை யாண்டும் ஆயத்தமாய் இருக்கவேண்டும். மற்ற மகிமைகள் வாழ்வை அலங்கரிப்பதற்கு அவளுடன் வந்தமைகின்றன. செல்வத்தைப் பெருக்குவதற்குச் சின்னமாகத்

திருமகள் இருக்கின்ருள். செல்வத்தைப் பெருக்கி அதைப் பயன்படுத்துபவர்களே இகலோக வாழ்க்கையை நன்கு நடத்தமுடியும். பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை என்பது கோட்பாடு. செல்வம் ஒன்றை மட்டும் படைத் திருந்தால் போதாது. கலைகள் பல பயிலுவது அவசியமாகிறது. முயலுகின்றவர்கள் வாழ்க்கையில் விதவிதமான கலைஞானக் கலைகளைப்பெறலாம். அதற்கு அறிகுறியாக சரஸ்வதி விலங்கு கின்ருள். இவர்கள் இருவரும் துர்க்காதேவியுடன் மண்ணுலகுக்கு எழுந்தருளுவதுபோன்று கணேசனும்-கார்த்தி கேயனும் வருகின்ருர்கள். ஞானத்துக்கும் நல்லறிவுக்கும் அறிகுறியாக கணேசன் இருக்கின்ருன். ஞானமிருக்குமளவு வாழ்வு நல்வாழ்வு ஆகும். இசபரம் இரண்டுக்கும் அது உற்ற துணையாகிறது. பெற்றுள்ள நல்லறிவைச் செயலுக்குக் கொண்டுவரவேண்டும். செயலில் காட்டப்படாத அறிவு ஓங்கியிருப்பதும் மறைந்திருப்பதும் ஒன்ருய்விடுகிறது. வாழ்வில் அதைப் பயன்படுத்தும்பொழுதே உண்மையில் அது ஓங்கி யிருப்பதின் மகிமை முழுதும் வெளியாகிறது. அறிவைச் செயலாக மாற்றுபவன் முருகக்கடவுள். அவன் மூலம் வாழ்வு ஆற்றல் நிறைந்தது ஆகிறது. அம்பிகையின் பகுதிகளாகிய இந்த நான்கு தேவதைகளையும் தொகுத்துப் பார்க்குமிடத்து ஆதிக்கத்துக்கு அறிகுறியாகின்ருள் துர்க்கை. செல்வத்தை வளர்க்கின்ருள் லெக்ஷ்மி.

சக்தியின் திருவிளையாட்டை அணு முதல் அண்ட பகிரண்டம் வரை எங்கும் காணலாம், இப்பூமியைப்போன்ற என்னிறந்த கிரகங்கள் ஒன்றையொன்று அதி வேகமாகச் சுற்றிக்கொண்டு ஓடுகின்றன. இவ்வாறு கிரகங்களைச் சுழல வைப்பதற்கு ஆகர்ஷண சக்தியென்று பெயர். இச்சக்தியின் வன்மையால் பந்துகள் போன்று அவையாவும் ஆட்டப் படுகின்றன. ஆனல் நிலைகுலையாது ஒழுங்காக அவைகள் சுழல்வதனின்று ஆட்டுவிக்கும் சக்தி அறிவு மயமானது என்பது விளங்கும். பராசக்தியின் இத்தகைய விளையாட்டு மனதுக்கு

எட்டாத வண்ணம் அகண்டாகாரத்தில் விரிந்தோடுகிறது. பரந்த விண்ணகத்தினுள் நாம் வசிக்கும் இந்த மண்ணகமானது ஒரு அணுப் புள்ளிபோன்றது. இதனுள் நடைபெறுகின்ற மாயாசக்தியின் லீலா விசித்திரம் மனிதனை மயங்கிடப்பண்ணி விடுகிறது. பர்வதங்கள் ஆகாயத்தை அளாவிக்கொண்டு நிற்பதும், அவைகளினின்று அருவிகள் கர்ஜித்தும் விரைந்தும் வீழ்வதும், மேகம் மின்னி ஒளி வீசி இடிப்பதும், மழை தாரை தாரையாகப் பெய்வதும் இயற்கையின் பேராற்றலைப்பற்றி ஞாபகமூட்டுகின்றன. நீராவியும் மின்சாரமும் யந்திரங்களின் மூலம் செய்யும் நானாவித வேலைகள் அதன் வலிமையை விளக்குகின்றன. இனி, உயிர்ப் பிராணிகளின் வாழ்வு முறையை ஆராயுமிடத்தும் சக்தியின் விளையாட்டு வெளியாகின்றது. ஜீவ ஜந்துக்கள் தத்தம் இனம் சேர்ந்திருப்பதும். இனம் காப்பதும், இனம் பெருக்குவதும், சத்துருவோடு சண்டையிடுவதும் சக்தியின் ஜீவ தத்துவத்தைக் காண்பிக்கின்றன. மானுடவர்க்கத்தினுள் இதே இயக்கம் அதிக ஆற்றலுடனும் அறிவுடனும் கூடியதாக இருக்கிறது. ஒரே மின்சார சக்தி நானாவித வடிவுடைய நானாவித யந்திரங்களை நானாவித முறைகளில் இயக்கி வருவது போன்று உயிர் வாழ்வன அனைத்தையும் ஒரே பிராணசக்தி ஆட்டிவைக்கின்றது. வாழ்வில் வைத்திருக்கும் பற்றை நீக்கிப் பரந்த நோக்கத்துடன் பார்ப்பார்க்கு இவ்வுண்மை விளங்கும்.

ஜடப் பொருளில் இயங்குகின்ற சக்தி ஒன்றுக்கொன்று உடன்பாடாயிருக்கும்போது அதற்கு கவர்ச்சி (attraction) என்று பெயர். எதிர்மறையாயிருக்கும்போது அதற்குவிலக்கு (repulsion) என்று பெயர். ஜீவிய தத்துவத்தில் இதே சக்தி விருப்பு வெறுப்பு என்ற பெயர்கள் படைக்கின்றது இனியதில் விருப்பும் இன்னாதில் வெறுப்பும் கொள்வது முன்னேற்றம் அனைத்துக்கும் முறைமையாகின்றது இவையிரண்டைவிட கடந்தது அன்பு. பராசக்தி அன்பில் சம்பூரண நிலை அடைகின்றாள். இன்சொல் முதலிய மேலாம் தன்மைகள் அன்பினின்று

உதிக்கின்றன. துன்பத்தையும் மனக்குழப்பத்தையும் மாற்றுதற்கு அன்பு செறிந்த இன்சொல் ஒன்றே மருந்தாகும், இது அதி சூட்சுமமாய் இருக்கின்றமையால் இதன் ஆற்றல் எளிதில் விளங்குகிறதில்லை. ஆயினும் உலகனைத்தும் அன்பின் வசப்பட்டிருப்பது உண்மை, இதைக்கரவாது எடுத்து மண்ணுலகில் வழங்கியவர்களே மகாபுருஷர்கள் "சக்தியாய்ச் சிவமாய்" என்று பகர்ந்த பெரியோர்கள் "அன்பே சிவம்" என்று பகர்ந்தருளி இருக்கின்றனர். சிவனுக்கு சக்திமான் என்பது மற்றொரு பெயர், ஏனென்றால் அவன் அன்புவடிவினன்; ஆற்றல் அனைத்தும் அவனிடத்திலிருந்து உதிக்கின்றது. ஆதலால் எல்லாம் வல்ல பரம்பொருளின் இயங்கும் தன்மைக்குச் சக்தியென்றும் இயங்காத்தன்மைக்குச் சிவமென்றும் பெயர்.



# தேவியின் அம்சங்கள்

வேந்தன்முதல் வேலையாள் வரையில் உள்ள காரியஸ்தர் அனைவரும் அடங்கியது அரசாங்கம். ஒவ்வொரு உத்தியோகஸ்தனுக்கும் பிரத்தியேகமான பிரவிருத்தி உண்டு. அம்முறையில் அம்பாள் அநேக அம்சங்களையுடையவள். யார் யார் எந்த வைபவத்தை விசேஷமாகப்பெற விரும்புகின்றனரோ அதற்கேற்ற தேவியம்சத்தைப் பெரிதும் போற்றி வணங்குகின்றனர். எங்கும் நிறைபொருளாகக் கருதப்படும்போது அவளுக்குப் பூரணி கல்வியைப் பெருக்குகின்றாள் கலைமகள், ஞானத்தை ஓங்குகின்றான் கணபதி வாழ்வை ஆற்றல் படைத்த தாக்குகின்றான் முருகவேள். நிறைவாழ்வில் பொலிவுகளை விளக்குகின்ற சக்திகளாக இப்பதிகள் அமைந்திருக்கின்றன.

பூலோகத்துக்கு எழுந்தருளுகின்ற துர்க்கைதேவிதத்துவ விளக்கத்துக்கும் சின்னமாகின்ருள். அவள் மகிஷாசுரமர்த்தனியாகி மண்ணுலகுக்கு எழுந்தருளுகின்ருள். சிங்கத்தின் மீது நின்றுகொண்டு அவள் அவ்வசுரனை அதம் செய்கின்ருள். கன்னங் கரேலென நிறமுடைய அவன் நிலத்தில் நிற்கின்ருன் அவனுக்கு சற்று உயரத்தில் சிம்மத்தின் மீது நின்று அம்பிகை ஆட்சி புரிகின்ருள். இவள் மஞ்சள் மேனி உடையவள். சிவப்பு வஸ்திரம் அணிந்திருக்கின்ருள். ஆயுதங்கள் பலவற்றை அவள் கையாளுகின்ருள். மகிஷாசுரன் தமோகுணத்தின் பிரதிநிதியாகின்ருன். துர்க்கை ரஜோகுணத்தின் சின்னமாகின்ருள். இந்த அம்பிகையின் தலைக்குமேல் சதாசிவம் தூவெண் வடிவெடுத்து ஆழ்ந்து ஆத்மநிஷ்டையில் இருக்கின்ருர். அவரது வெண்நிறம் சத்வகுணத்தை காட்டுகின்றது. அவர் தன்னில் தானுயிருப்பது பிரபஞ்சத்திலுள்ள கிருத்தியங்களையெல்லாம் கடந்து பரத்தின்பால் செல்லுவது நமக்கு லக்ஷியம் என்பதை விளக்குகிறது. உருவமில்லாத பரம்பொருளிடத்திலிருந்து சத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்கள் வடிவெடுக்கின்றன, தரையில் இருக்கும் தமோ குணத்தின் பால் போராட்டம் அதிகம். ரஜோ குணம் தமோ குணத்தை வெல்லுகிறது. பிறகு அது செல்வமாகவும், கலைகளாகவும், நல்லறிவாகவும், பேராற்றலாகவும் வடிவெடுக்கிறது. அவைகளை நல்வழியில் பயன்படுத்தி சத்வம் என்னும் நடுநிலையின் பால் அது செல்லுகிறது. பிறகு முக்குணத்துக்கும் அப்பாலுள்ள பரம்பொருளில் ஜீவனை அந்தச் சக்தி கொண்டு சேர்க்கிறது. இக்கோட்பாட்டை துர்க்காதேவியின் சொரூபம் விளக்குகின்றது. சக்தி எங்கும் நிறைந்தவள் என்பதை அவள் படைத்துள்ள பத்துக் கைகள் விளக்குகின்றன. எட்டுத் திக்குகளில் இருப்பவளும் அவளே என்பதை விளக்குதற்குப் பத்துக்கரங்கள் அமைந்திருக்கின்றன. சக்தியின் அனுக்கிரகத்தைக்கொண்டு ஜீவன் வாழ்வு என்னும் போராட்டத்தை வெற்றிகரமாக முடித்துப் பரத்தின்பால் செல்லுதல் அவளுடைய குறிக்கோள் ஆகின்றது.

# சக்தி பூஜை

போஜனம் பண்ணுபவர்க்குப் பசிப்பிணிபோம்; தேகம் திடம்பெறும். அவ்வாறே சக்தி பூஜை பண்ணுபவருக்கு சக்தி வலுக்கும் காரியத்தைக்கொண்டு காரணத்தை நிர்ணயிக்கலாம், உலகத்தில் மேன்மையனைத்தும் பெற்று இன்புற்றிருப்பவர்களே சக்திமான்கள் ஆவர். முறையுடன் சக்தியைப் பயன்படுத்துதல் பூஜையின் முடிவான நோக்கம்.

ஆயுதம் இல்லாதவன் அரை மனிதன் என்று சொல்லப் படுகின்றான். ஆயுதம் உடைத்திருப்பதும் அதை முறையே கையாளுதலும் ஆண்மைக்கு அறிகுறியாகும். ஆனால் இந் நாளில் நம்நாடு செய்கின்ற ஆயுதபூஜை பரிகாசத்திற்கு உரியதாகும் துருப்பிடித்துக் கிடக்கும் பழைய கருவிகளை வருஷமொருமுறை துலக்கிச் சந்தனம் புஷ்பம் சாத்தி அலங்கரித்து வைத்து, அவைகளின் எதிரே விழுந்து நமஸ்கரித்துவிட்டு, மறுபடியும் அவைகளைப் பத்திரப்படுத்தி வைத்துவிடுகின்றனர். இது சக்தி பூஜையின் பெயரால் தோன்றியுள்ள போலி உபாசனை சக்தியின் உதவியை உண்மையில் நாடுபவன் வல்லவனாகின்றான். அத்தகைய வல்லவனுக்கு புல்லும் ஆயுதம்: ஆதலால் வல்லவனாகி ஆயுதத்தை ஒழுங்காக உபயோகிப்பவனே ஆயுத பூஜை செய்பவனாகின்றான். அத்தகையவன் வருஷம் ஒருமுறை ஆயுதத்தை அலங்கரிப்பதில் அர்த்தமுண்டு.

சரஸ்வதி பூஜைபண்ணும் நம் நாட்டில்தான் அஞ்ஞான இருள் நிறைந்து கிடக்கின்றது என்று ஒருவர் பகர்ந்ததில் பொருள் மிக நிறைந்திருக்கிறது. ஏனென்றால் வைதிக விதிப்படி நம்மவர் கலைமகளை வணங்குகின்றாரல்லர். உணவு உடலுக்கு உறுதி தருவதுபோன்று சாஸ்திரங்களின் உட்பொருள் உள்ளத்துக்கு ஒளிவிளக்காக வேண்டும்.

அங்ஙனமின்றி அது புஸ்தகத்தில் அடங்கியிருப்பதோடு நின்று விடுகிறது அதுதான் நம்மனோர் மாட்டுள்ள குறை. ஆதலால் தினந்தோறும் கல்வி பயிலுதல் கலைமகளுக்கு உகந்த பூஜையாகும்.

இகபரம் இரண்டிலும் மக்களுக்கு இன்றியமையாத புருஷார்த்தங்களைப் பராசக்தி பகுத்தருளியவண்ணமாயிருக்கின்றாள். சுவாசிக்கும் காற்றுப்போன்று அவளுடையகாருண்ய வெள்ளம் தங்குதடையின்றிப் பொங்கிக் கொண்டிருக்கிறது. உலகனைத்தையும் ஈன்றெடுத்த அன்னை உலகுக்கு வேண்டிய யாவையும் பரிவுடன் வழங்கிடக் கைதூக்கிக் காத்திருக்கிறாள். அத்தகைய அகிலாண்ட நாயகியின் அனுக்கிரகத்தைப் பெறவல்ல அறிவையும் ஆற்றலையும் நம்மனோர் முறையே நாடுவார்களாக.

சுபம். சுபம்.



---

உ

சிவமயம்

# வன துர்க்கா தேவியான ஸ்ரீ காளியம்மன் மீது பாடல்கள்

சாமியாடி திரு. **ப. செல்லய்யா தேசிகர்** பாடியுள்ள

ஆசிரியப்பா

## காப்பு

பூங்கொண்ட நாட்டில் பொருந்தும் கிணத்தடியாள்
மான்கொண்டானோடு வாதாடினவள்
பூங்கொண்ட மாதுதனை பணிந்தால் வளர்செல்வம்
உண்டாகும்
பாதுமிக காத்திடுவாள் கிணத்தடி காளி அன்னையவள். 1

## விருத்தம்

ஏனம்மா இச்சென்மம் யெடுத்தே நானும் இவ்வுலகம்
மீதினிலே ஏங்கிவாடி
சானம்மா என்வயறுக்குயிரை தேடிதரணியில்
யெங்குளங்கும் சலித்துஓடி
நானம்மா பட்டதுயர் எல்லாம் தீர்த்துஉன்
நளினபாதம் தனக்கு அடிமையாக சேர்த்து
ஆனம்மா யென்வாக்கில் காளிநீலி அகமகிழ்ந்து
கிணத்தடியில் வாழும் தாயே. 2

மார்க்கமில்லா மானிடரை சதமென் றெண்ணி
மண்டலத்தில் நான் திரிந்து அலைந்தது அல்லால்
நிர்க்கமுடன் உன்பாதம் தன்னைக்காண நிற
முறைப்பார் ஒருவரையும் காணேனம்மா
ஆக்கமுடன் சாஸ்திரத்தை அறிந்து பார்த்து
அகமகிழ்ந்தேன் சித்துஇங்கே இருக்குது என்று
மார்க்கமுடன் கிணத்தடியில் வாழும் தாயே
மைந்தனை வந்து அனுதினமும் ரட்சிப்பாயே. 3

வாரிதிசூள் பூவுலகமிதினிலே வளமிகுந்த
கண்டமா நகரம்தன்னில்
நீர்நிறைந்த செட்டியார் குளத்தின் கரையில்
நிழல் மிகுந்த இத்திமரத்தடியிலே எந்நாளும்
பேர்மிகுந்த நாலுகால் மண்டபமிதில்
பெருமையுடன் கொலுவிருக்கும் பேச்சிநாச்சி
பார்நிறைந்த கிணத்தடி மாகாளி நீலிபாலகனை
யனுதினமும் ரட்சிப்பாயே. 4

அச்சமின்றி காமதனில் சூலம்எந்தி அழகான
சிரசுதனில் கிரீடம் வைத்து
பச்சைவடபாவாடை யிடையில் கட்டியபாங்
கான ஒட்டியானம் ரவிக்கைபூட்டி
மச்சமுள்ள கொங்கைதனில் ஆரம்சூடி
மாணிக்கத்தால் ஆபரணம்மார்பில் இட்டு
இச்சையுடன் கிணத்தடியில் வாழும் தாயே
எளியேனை யனுதினமும் ரட்சிப்பாயே. 5

அண்டர்களும் முனிவர்களும் போற்றி செய்யும்
அரனுடனே வாதாடும் அம்மை நீயே
வண்டர்களை கருவருக்கும் சூறி வீறிவளம்
பெருகும் கண்டநகர் பீதில்வாழும்

கோண்டல் வண்ணன் தங்கையரே காளி
நீலி குவலயத்தில் உன்னையல்லால் வேறேதெய்வம்
கண்டறியேன் கிணத்தடியில் வாழும்தாயே
கலியகற்றி அடியேனை ரட்சிப்பாயே. 6

வையகம்புகழ் கிணத்தடியில் வாழ்முனியன்
மட்டடங்காச் சின்னகருப்பர்கூட
செய்யபுகழ் சோணைஅரசடி கருப்பர்சேற்
கையுள்ள மலையாள மாகருப்பும்
தையல் நல்லாள் அங்காள ஈஸ்வரியும்
சங்கிலியும் ராக்காயி பேச்சிநொண்டி
மையனுடன் கிணத்தடியில் வாழும் தாயே
மைந்தனைவந்து யனுதினமும் ரட்சிப்பாயே. 7

ஆதியிலே முன்னோர்கள் சொன்ன வாக்கும்
அவர்களுக்கு நீ சொல்லிக்கொடுத்த வாக்கும்
நீதியுடன் மூவேழு தலைமுறையாய்
நேர்மையுடன் காத்துவந்த தாயும்நீயே
வேறேகெதி எங்களுக்கு உண்டோசொல்வாய்
யிவ்வேளைதனில் பாலகனை ஆதரிப்பாய்
சோதியுடன் கிணத்தடியில் வாழும் தாயே
துயரகற்றி பாலகனை ரட்சிப்பாயே. 8

நெடுமால் தனக்கிளைய மாகாளி தன்னையே
நெஞ்சில் நினைந்தவுடனே
நீங்காத வல்பிணிகள் கணநோய்வு
சாயமட்டம் நீங்கியே வாங்கிஓடும்
நேசமாய் உன்னுடைய பாதாரவிந்தமதை
இருநேரமும் போற்றிசெய்தேன்
பாசாங்கு செய்யாதே யெந்தனைக்
காத்திடும் பத்திரகாளி உமையே! 9

ஓம்

# கிணற்றடி காளியம்மன் கீர்த்தியுடன் யீந்த பாக்கள் நவகாளி அம்பிகைக்குரிய நவசக்திப் பாடல்கள்

அறவெண்பாக்கள் ஆக்கியோன்
கவிஞர் சுப நா. நாகப்பன்

## நாகப்பன் வேண்டும் நல்லறங்கள்

### வெண்பா

நவசக்தி வேண்டுசுப நாகநாக சுப்பன்
சிவசக்திப் பேர்விளங்கும் கேட்டேன் — புவிவாழ்
எவருக்கும் இன்புறவே ஏற்றமிக ஈசா
தவருமல் வாழ்வுயர்த்தி தா.

## கண்டமாநகர் கொண்ட பெரும் பேறு காண்

### வெண்பா

கண்ட விராயநகர் காக்கும் கிணற்றடியான்
மாண்டுபுகழ் காளியாத்தாள் மாண்புதனை — எண்டிசையும்
கொண்டாடிப் பேறுபெற்று தொண்டு செய்யும் மக்களுளம்
கண்ட விராயநகர் காண்.

## அம்பிகை அலங்கார அருள் வெண்பா

விழிசெவி நா வேண்டுவரம் ஈந்தருளி எங்கள்
மொழிக்குப் பொருளாய் விளங்கும் — அழகே
பழிக்குத் துணையின்றி பாவமிலா வாழ்க்கை
வழிக்குத் துணையாய் வருக.

## நவசக்தி பரிந்தருளும் நவகாளி அம்பிகைகளும் தோத்திர வெண்பாக்களும்

### 1. தனகாளி அம்பிகை

கிட்டாப் பொருளும் கிட்டிடவே செய்தருளும்
மட்டிலா மாகாளி அம்பிகையே — இட்டமுடன்
கொட்டும் மழைபோல் கொடுப்பவளே காளியம்மா
தட்டிலாது ஈந்தருள்வாய் தான்.

### 2. கெஜ காளி அம்பிகை

ஆனை இருபுறமும் அம்பிகைக்கு பூச்சொரிய
சேனைத் தலைவியாய் சிங்கமதில் — ஏனையோர்முன்
மோனைச் சிரிப்புடனே முன்னே பவனிவரும்
தானைத் தலைமகளைக் காண்.

### 3. விஜயகாளி அம்பிகை

வெற்றித் திருமகளே வீரசூலம் கொண்டவளே
சுற்றம் துணைபுரிய குற்றமிலா — பற்றுயர
உற்றார் உறவினரும் ஊராரின் பேர்நலமும்
கற்றவரும் இன்புறவே காட்டு.

### 4. வீரகாளி அம்பிகை

அஞ்சாத உள்ளமெலாம் ஆட்கொண்ட அம்பிகை
நெஞ்சாரப் போற்றுகிறோம் நின்புகழை — வஞ்சமிலா
தஞ்சமுடன் வாழ்வளிக்க தாயே நீ வாழ்க்கையிலே
பஞ்சமின்றி எஞ்ஞான்றும் பார்.

### 5. சந்தான காளி அம்பிகை

கல்லும் கசிந்துருக கற்கண்டுச் சொல்லினிக்கும்
செல்வஞ்சேர் பிள்ளைதரும் செந்தமிழ்த்தாய் — செல்வியம்மா
சொல்லாமல் ஈந்தருள்வாய் சுந்தரியே உள்ளமுடன்
எல்லா வர மருள்வாய் ஏற்று.

## 6. ஆதிகாளி அம்பிகை

ஆதி முதற்கொண் அம்பிகையே சோதியாய்
பீதியின்றி பில்லிசூன்யம் ஏதுமின்றி — நீ தொழிய
வேதியர்கள் கூட்டமெலாம் வேள்விகளில் வேதங்களை
ஓதினரே ஓம்சக்தி ஓம்.

## 7. தானிய காளி அம்பிகை

புல்லின் விதைகளையே பூமியிலே நெல்லாக்கி
நல்லுணவாய் மக்களுக்கு அள்ளியீந்தாய் — தொல்லுலகில்
பல்லோரும் ஏர்பிடித்து பாருழுது காரருக்க
நல்லுலக வாழ்வளித்தாய் நன்று.

## 8. ஐசுவரிய காளி அம்பிகை

பாடுகின்ற மக்கள் பதினாறு பேறுபெற
நாடும் முறையீந்தாய் நாயகியே — வீடுதோறும்
தேடிக் கொடுத்தருளி திவ்யவரம் நல்கிடுவாய்
பாடிப் பணிந்தேனுன் பாதம்.

## 9. நவகாளி அம்பிகை

நவகாளி அம்பிகையே நானுமுனை வேண்டி
நவசக்தி யீந்திடவே கேட்டேன் — தவமாய்
எவருக்கும் தீங்கின்றி எக்காலும் நன்மை
தவறாமல் காத்தருள்வாய் தான்.



ஓம்



# அருள்மிகு பத்திரகாளியம்மன் வணக்கம்

## (தமிழ் அர்ச்சனை)

## 108 போற்றிகள்

புலவர் **முத்து. சண்முகன்,** B. A.

அன்பெனும் உருவாய் அமர்ந்தாய் போற்றி
அகில மெலாம் நிறை அமுதே ,,
இன்பநற் பொருளாய் இயக்குவாய் ,,
ஏற்றங் கொடுக்கும் இறைவியே ,,
நன்மை நல்கும் நலமே ,,
நானிலங் காக்கும் நல்காய் ,,
புன்மை நீக்கும் புகழோய் ,,
புனிதப் பொருளாய்ப் பொலிவாய் ,,
கண்ட மாநகர்க் கண்ணே ,,
கரடி குத்திக் காளியே ,,
கொண்டலை வழங்கும் கோகிலம் ,,
கோதிலா மணியே குருவே ,,
தெண்டிரைக் காற்றே திருவே ,,
தேசம் போற்றும் தேவியே ,,

கண்ணிறை அழகே கனிவே போற்றி
காலமெ லாம்எமைக் காப்பாய் ,,
வாழ்வெலாம் அளிக்கும் வனிதாய் ,,
வள்ளலாய் மிளிரும் வல்லபி ,,
தாழ்விலாப் பொருளைத் தருவாய் ,,
தாயே எமக்கருள் தகையே ,,
ஆழ்கடல் அமுதே முத்தே ,,
ஆனந்தப் பொருளாய் நிறைந்தாய் ,,
சூழ்வினை நீக்கும் சுகமே ,,
சூரனைக் கொன்ற சுந்தரி ,,
பொற்புடைப் பொருளே புனிதமே ,,
பொன்னம் பலத்தோன் போகமே ,,
உற்றார் எனத்தகும் உமையே ,,
ஓங்கா ரப்பொருள் ஒளியே ,,
பேறெலாம் நல்கும் பெரியாய் ,,
பெருமை பெருக்கும் சக்தியே ,,
கற்றோர் போற்றுங் களிப்பே ,,
காவியக் கருதாய்க் கமழ்வாய் ,,
நீதியை வழங்கும் நிமலே ,,
நேரியோர் மனத்தில் நிலைப்பாய் ,,
ஓதியே உணரும் ஒண்மணி ,,
உவமை சொல்லொணு உத்தமி ,,
ஆதியாய் எங்கும் அமர்ந்தாய் ,,
அருமறை போற்றும் ஆத்தாள் ,,
தூதிலா தவர்க்குத் துணையே ,,
துன்பந் துடைக்கும் தூ மணி ,,
செல்வம் வளர்க்கும் திருவே ,,
சேவடி இணையைப் பணிந்தோம் ,,
கல்வியுங் கனிவும் தருவாய் ,,
காட்சியை நல்கும் காளியே ,,
பல்வித வளங்களும் தருவாய் ,,
பாங்குறத் திகழும் பைரவி ,,

மெல்லிய மனமுடை யேலோய் போற்றி
மேதகு மாதா விமலே ,,
எதிரியைத் தொலைக்கும் ஈஸ்வரி ,,
ஏகாந் தப்பொருள் இறைவியே ,,
கதிர்மணி முகத்தோய் கரும்பே ,,
கனிமொழி நல்கும் களிப்பே ,,
மதியினை மகிழ்ந்து தருவாய் ,
மங்கல மாய்நிறை மகிழ்வே ,,
நிதியளி பொக்கிஷ நிறைவே ,,
நீங்கா தெம்மைக் காப்பாய் ,,
மாமணி முத்தே மலரே ,,
மக்களைக் காக்கும் மாதா ,,
தூ மணி விளக்கின் சுடரே ,,
துணையாய் வந்து தோன்றுவாய் ,,
வாமனன் தங்காய் வணங்கினோம் ,,
வாழ்த்தும் பெருமை வழங்குவாய் ,,
சேமமாய் எம்மைக் காப்பாய் ,,
சிவனருள் கொண்ட செல்வியே ,,
பார்வதி தேவியே பாதம் ,,
பார்க்கும் இடமெலாம் பரந்தாய் ,,
பேர்பெறும் இறைவியாய்த் திகழ்வாய் ,,
பெட்புடைப் பெரிய நாயகி ,,
சீர்தவழ் வேப்பிலைச் சிரத்தோய் ,,
சிக்கெலாம் நொடியில் தீர்ப்பாய் ,,
கூர்ந்த அறிவுடைக் குஞ்சரி ,,
குலத்தை வளர்க்கும் கொடியே ,,
மான்நிகர் விழியைப் பெற்றாய் ,,
மாசிலாப் பொன்னின் ஒளியே ,,
தேன்நிகர் மொழிதரு தெய்வமே ,,
திரிபுரம் எரித்தோன் தேவியே ,,
கான்தர உறையும் காளியே ,,
கமழ்மனக் களபம் அணிந்தோய் ,,

வான்வரை நிறைந்த மறையே போற்றி
வாசனைத் தூபம் வழங்குவோம் ,,
மலர்சொரியும் விழாவில் மகிழ்வோய் ,,
மகிடா சுரனை மாய்த்தோய் ,,
பலபாற் குடத்தைப் பார்ப்போய் ,,
பனிமலர் மணமாய்ப் பரவுவோய் ,,
நலந்தரு சூலம் பிடித்தோய் ,,
நாட்டின் தாயாய் அமர்ந்தோய் ,,
புலனுறு அறிவாய்ப் பொருந்தியோய் ,,
போகமெ லாந்தரு புண்ணியோய் ,,
விரும்பினோர் மனத்தை விளக்குவாய் ,,
வீட்டினை அளிக்கும் விமலை ,
அரும்பும் புன்னகை அம்மை ,,
ஆணவம் அழிக்கும் அப்பிகை ,,
பெரும்பெயர் நல்கும் பேறே ,,
பேரருள் என்றும் கொடுப்பாய் ,,
அருமறை எமக்கும் அளிப்பாய் ,,
அங்கிங் கெனாது நிறைந்தாய் ,,
தக்கநல் ஆட்சி தருவாய் ,,
தருக்கரை அடக்கும் தாயே ,,
மிக்குயர் மீனும் பிகையே ,,
மீடியெலாந்தவிர்க்கும் வித்தகி ,,
தக்கநற் றமிழைத் தருவாய் ,,
தாழ்வெலாம் என்றும் தகர்ப்பாய் ,,
சக்தியாம் வேலைக் கொடுத்தோய் ,,
சண்முகன் விநாயகன் தாயே ,,
நித்தம் தொழுதுனைப் பற்றினோம் ,,
நெறியுடைக் கிணத்தடிக் காளியே ,,
காக்கும் கருணைக் கற்பகம் ,,
காப்பாய் காளியே போற்றி ! போற்றி !!

❋

# அருள்மிகு பத்ரகாளியம்மன்

## திருப்பள்ளி எழுச்சி

புலவர் : முத்து. சண்முகன், B. A.,

கதிரவன் ஒளிக்கதிர் கீழ்த்திசை பெருக
கடுகின குருகுகள் ஒளியிசை கூட்டி
உதிர்மலர்க் காவினில் உயர்மனம் பரப்பி
உனதிரு மலர்ந்தாள் பரவின உவந்தே
மதிபெறு பல்லுயிர் மகிழ்வுடன் விழித்தே
மலரடி தொழவென கூப்பின கைகள்
நிதிதரு காளியே எங்களை யாள
நிலமகளே பள்ளி யெழுந்தரு ளாயே

பண்ணிசை பாடிய பாவலர் ஒருபால்
பரவிடும் அடியவர் பணிவொடு ஒருபால்
கண்ணினில் நீவா வேண்வேவோர் ஒருபால்
கரங்களில் மலர்பெறு கனிவினர் ஒருபால்
திண்ணிய இசைதரு கருவியர் ஒருபால்
தீவினை நீங்கிடத் தேடியோர் ஒருபால்
எண்ணியே வணங்குகிறோம் இனியநற் காளியே
ஏந்திழையே பள்ளி எழுந்தருளாயே

செஞ்சடைக் கங்கையை சென்னியில் தரித்தே
சிவனவன் விரும்பிடு தேவியே உமையே
மஞ்சளும் குங்குமம் மணம்பெற அணிவாய்
மலர்மலே சொரிந்திட வருந்திருக் கூட்டம்
தஞ்சமென் றடைபவர் தளர்வினை நீக்கி
தகுதியாய் மிகுதியும் வெகுநலம் தருவாய்
அஞ்சிடும் அடியவர் துயர்அழி அம்மா
ஆண்டவளே பள்ளி யெழுந்தரு ளாயே

முந்திய முதலிடை முடிவுமாய் நின்ருய்
மூவரும் வேண்டிடு முழுமுத லானுய்
சிந்தனை தெளிவுற சிறப்பினைத் தருவாய்
செல்வங்கள் பெருகியே தேங்கிடக் கொடுப்பாய்
உந்தனைப் புந்தியில் வந்தனை செய்தோம்
ஒருமன தோடுநற் திருவினைக் கண்டோம்
அந்தமில் அம்பிகை அருள்தரு காளியே
ஆரமுதே பள்ளி யெழுந்தரு ளாயே

நீதியின் நிதியாய் நிகழ்த்திட நிலைத்தாய்
நேரெதிர் வஞ்சரை நீக்கிட நின்ருய்
வாதியாம் கொடியவர் நெஞ்சினைப் பிளந்தே
வாட்டிட முத்தலைச் சூலமே பிடித்தாய்
ஆதியில் அடியோடு அரக்கனை யழித்தே
ஆனந்த மானகூத் தாடினை அழகாய்
சூதினைத் தொலைத்திடத் தோன்றிடு காளி
தூயவளே பள்ளி யெழுந்தரு ளாயே

பாருற நிறைதிரு பைங்கிளி மொழியே
பாவலர் உளமுறு பாடலின் .கருவே
காருரு வண்ணன் கருதிடு தங்காய்
கடிமயில் வாகனன் புனிதநல் லன்னுய்
பேருரு வயிற்றுப் பிள்ளையின் தாயே
யிறைசடைப் பெம்மான் பெட்புறு துணையே
சீருறு காளியே காத்திடு எமையே
செந்திருவே பள்ளி யெழுந்தரு ளாயே

பொங்கிய பேரருள் பொலிந்திட விளங்கும்
பூவுலக காண்டிடப் புவியர சானுய்
இங்கித சொல்லமு தூற்றெனத் தோன்றும்
இமவான் மகளே எழிலுரு முகத்தாய்

எங்கனும் தொண்டர்கள் இணையடி பரவ
ஏற்றிநின் ருரன் பாய்உன் எதிரே
மங்களக் காளியே வரமருள் வாயே
மாமணியே பள்ளி யெழுந்தரு ளாயே!

நன்னய உலகினில் நடமிடும் இயற்கை
நாடியே அகம்புறம் மருவிட உறைந்தாய்
பன்னிய ஒலியினில் பரவிடும் பதமாய்
பார்த்திடுங் காட்சியின் பருவமுள் குணத்தாய்
துன்னிய அடியவர் துணையெனக் கொண்டே
துதித்திடத் தினந்தினந் தொழவென வரவே
மின்னிய இடைதவழ் காளியே தாயே
மெய்ப்பொருளே பள்ளி யெழுந்தரு ளாயே

பாதங்கள் பற்றித் தொழுதுனை வாழ்த்தி
பணிவுடன் அருள்பெறக் கூடியே போற்றி
ஏதங்கள் அகன்றிட இறைஞ்சினேம் ஆத்தாள்
எம்பெரு மாட்டியே இரக்கமே கொள்வாய்
வேதங்கள் அறியொனு மேதகு பொருளே
வேண்டினேம் கிணத்தடித் காளியே வருவாய்
சீதங்கொள் வளமலி கண்டமா நகரின்
திருமகளே பள்ளி யெழுந்தரு ளாயே.

ஓம் பராசக்தி துணை.



ஓம்

# ஸ்ரீ பத்திரகாளியம்மன் புஷ்ப பல்லக்கில் பவனிவருதல்

## பழ. கரு. குடும்பத்தார் ''திருக்கண்'' சாற்றிய சாமி



இப்பல்லக்கை அலங்கரித்தவர் சிறந்த புஷ்ப
வேலைக்காரரும் புஷ்ப வியாபாரியுமான
திருப்புத்தூர் பஸ் ஸ்டாண்ட்

**பூக்கடை**

**AR. சண்முக தேசிகர்.**